ஓம்
ஸ்ரீகுருப்யோ நம:



# வேதநெறி



Vedaneri News Letter Monthly

ஸ்ரீசுபக்ருது வருடம், ஐப்பசி மாதம் (அக்டோபர் 18, 2022)

ஶ்ருதி:21   தேனி, வேதபுரீ, ஸ்ரீஸ்வாமீ சித்பவாநந்த ஆச்ரம செய்திமடல்   ஸ்ம்ருதி:05

கொன்றை மலர்
அலங்காரத்தில்
ஆதிகுரு ஸ்ரீப்ரஜ்ஞா
தக்ஷிணாமூர்த்தி





# ஆசார்ய ஸந்தேசம்



தன்னைக் கட்டுதல் அறம் என்பார் மஹாகவி பாரதியார். ஆத்மவாந் என்றால் உறுதியுடன் கூடியவன். விழிப்புணர்வுடன் கூடியவன், தன்னை நன்றாகக் கட்டுப்படுத்தியிருப்பவன், உடலையும், மனதையும் புத்தியையும் நெறிப்படுத்தி, தன் கட்டுப்பாட்டில் வைத்திருப்பவன், (ஆத்மாவை) தன்னை உடையவன் என்று பொருள். உயிர் தன் கட்டுப்பாட்டில் புத்தி, மனம், உடல், இந்திரியங்களை வைத்திருக்குமானால் அவைகளுக்கு உடமையாளனாகிறது. மாறாக இருந்தால், அவைகளுக்கு அது (உயிர்) அடிமையாகிறது.

**உடலை நெறிப்படுத்துவது எப்படி?**

உடலின் வசத்தில் நாம் இருக்கக்கூடாது. நம் வசத்தில் உடல் இருக்க வேண்டும். கடவுள் நமக்குக் கொடுத்திருக்கும் சுதந்திரத்தை நன்கு பயன்படுத்தி, முயற்சித்து சரீரத்தை நம் வசப்படுத்த வேண்டும். உடலுக்கு நன்மை பயக்கக்கூடிய உணவைக் கொடுத்து, தேவையான உடற்பயிற்சியைக் கொடுத்து, உடலை நம் வசத்தில் வைத்திருக்க வேண்டும். தேவையான போது அதற்கு ஓய்வு அளித்து, தேவையான போது, அதனைச் செயல்புரிய வைக்க வேண்டும்.

**உடம்பார் அழியின் உயிரார் அழிவர்**
**திடம்பட மெய்ஞானமும் சேரவும் மாட்டார்**
**உடம்பினை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்**
**உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே**

என்று பாடினார் திருமூலர்.

உடல் சரியாக இருந்தால்தான் ஆன்மிக ஸாதனைகளைச் செய்ய முடியும். உடம்பு நன்றாக இல்லையென்றால், படிக்க முடியாது, ஸாதனை செய்ய முடியாது, எங்கு ஞானத்தில் உறுதி பெறுவது? உடம்பைச் சரி செய்வதற்கே நேரம் சரியாகப் போய்விடும். உடம்பினைப் பாதுகாத்து, உயிரானது ஸாதனை செய்து, திடமான ஞானத்தைப் பெற வேண்டும்.

இந்த சரீரம் அழியக்கூடியது, மாம்ஸ பிண்டம் என்பதெல்லாம் உண்மைதான். அவையெல்லாம் நமக்குப் பற்றற்ற தன்மை வர வேண்டும் என்பதற்காகக் கூறப்பட்டது.

அதற்காக உடலைக் காப்பாற்றக்கூடாது என்று பொருளல்ல. அதனைக் காப்பாற்றுவதும், அதில் பற்றில்லாமல் இருப்பதும் நம் கடமை.

**உடலைக் கட்டு, உயிரைக் கட்டலாம்,**
**உயிரைக் கட்டு, உள்ளத்தைக் கட்டலாம்,**
**உள்ளத்தைக் கட்டு, சக்தியைக் கட்டலாம்.**

- மஹாகவி பாரதியார்.

(ஜீவயாத்ரா- விளக்கவுரையில் பூஜ்யஸ்ரீ ஸ்வாமிஜீ அருளியது.)


**வேதநெறி**

**Vedaneri News Letter**

ஸ்தாபகர்

**பூஜ்யஸ்ரீ ஓங்காராநந்த மஹாஸ்வாமிகள்**

பொறுப்பாசிரியர்

**ஸ்ரீஸ்வாமீ பூர்ணாநந்த ஸரஸ்வதீ**

வடிவமைப்பு: **ஆ. சுந்தரராஜன்**

# நிகழ்ந்தவை

ஸ்ரீஶுக்ல யஜுர் வேதபாராயணம் (20-09-2022 - 24-09-2022)



பரம பூஜ்யஸ்ரீ ஸ்வாமி தயாநந்த ஸரஸ்வதீ அவர்களின் ஆராதனை (23-09-2022)



ஸ்ரீசரந்நவராத்ரீ சிறப்பு வழிபாடு ஆரம்பம்(26-09-2022)



ஸ்ரீசரந்நவராத்ரீ சிறப்பு வழிபாடு நிறைவு (04-10-2022)



ஸ்ரீஸரஸ்வதீ பூஜை (04-10-2022)



ஸ்ரீமங்கள சண்டீஹோமம் (05-10-2022)



அக்ஷராப்யாஸம்-எழுத்தறிவித்தல் விழா (05.10.2022)



திருவிளக்கு பூஜை 13.10.2022



## நிகழ்ந்தவை

### தர்ம தீபிகா மாணவர் வகுப்பு

சத்திரப்பட்டி - தேனி.



வேதபுரீ, தேனி.



## ஆச்ரமத்தில் நடந்து வரும் வகுப்புகள்

**ஸ்ரீஸ்வாமீ ஸமாநந்தர்**
**அவர்களின் வகுப்பு**
செவ்வாய் மற்றும் சனிக்கிழமைகளில்
காலை 10.30 - 11.30 மணி
**கேனோபநிஷத்**

---

**ஸ்ரீஸ்வாமீ பூர்ணாநந்தர்**
**அவர்களின் வகுப்பு**

ஞாயிற்றுக்கிழமை
காலை 07.00 - 08.00 மணி
**கைவல்ய நவநீதம்**

காலை 09.00 - 10.30 மணி
**தர்மதீபிகா**
மாணவர் பண்புப் பயிற்சி வகுப்பு

❖❖❖❖❖

திங்கள் முதல் வியாழன் வரை
மாலை 04.00 - 05.00 மணி
**சசிவன்னபோதம்**

❖❖❖❖❖

வியாழக்கிழமை
காலை 10.30 -11.30 மணி
**பஞ்சதயீ**

---

**வித்யாபீட நிகழ்ச்சி**
**திருவிளக்கு பூஜை**
(தமிழ்மாதக் கடைசி வியாழக்கிழமை)
அடுத்த திருவிளக்கு பூஜை 10.11.2022
காலை 10.30 - 11.30 மணி

அனைவரும் வருக!

ஸ்ரீராஜகோபால ஸ்வாமீ ப்ரதிஷ்டை, ஞானவனம், வேதபுரீ.



## ஸ்ரீதாயுமானவர் பாடல்கள் முற்றோதல் - அந்தர்யோகம்



இடம்: ஆதிகுரு ஸ்ரீப்ரஜ்ஞா
தக்ஷிணாமூர்த்தி வித்யாபீடம்
வேதபுரீ, தேனி.

நாள்: கார்த்திகை 23 வெள்ளி முதல்
25 ஞாயிறு வரை (2022, டிசம்பர் 9,10,11)

நன்கொடை
ரூ. 1500/- மட்டும்.

அனைவரும் வருக! அருளின்பம் பெறுக!

மேலும் விவரங்களுக்கு **9600449031**



பெருவாயின் முள்ளியார் அருளிச் செய்த

# ஆசாரக்கோவை

## உரை: ஸ்ரீஸ்வாமீ பூர்ணாநந்த ஸரஸ்வதீ

### பாடல்: 31 பயணம் செய்யும் பொழுது

**இருதேவர் பார்ப்பார் இடைப்போகார்; தும்மினும்**
**மிக்கார் வழுத்தின் தொழுதெழுக. ஒப்பார்க்கு**
**உடன்செல்லல் உள்ளம் உவந்து.**

பொருள்: இரு தெய்வங்களுக்கு நடுவிலும் அந்தணர்கள் நடுவிலும் போதல் கூடாது. யாராவது தும்மிய பொழுதும் பெரியோர் வாழ்த்துகின்ற பொழுதும் வணங்கிக்கொண்டே செல்க. வழிபோகும் பொழுது, சமானமான நண்பர்களுடன் சமமாக (ஒன்றாக) மனமகிழ்ச்சியுடன் செல்க.

### பாடல்: 32 அசுத்தம் செய்யத்தகாத இடங்கள்

**புல்பைங்கூழ் ஆப்பி சுடலை வழிதீர்த்தம்**
**தேவ குலம்நிழல் ஆனிலை வெண்பலி என்று**
**ஈரைந்தின் கண்ணும் உமிழ்வோடு இருபுலனும்**
**சோரார் உணர்வுடை யார்.**

பொருள்: புல், வயல்வெளி, பசுஞ்சாணம், சுடுகாடு, பாதை, நீர்நிலை, கோயில், நிழல் உள்ள இடம், பசுமந்தை நிற்கிற இடம், சாம்பல் ஆகிய பத்து இடத்திலும் எச்சில் உமிழ்தலும் மலஜலம் கழித்தலும் அறிவுடையவர்கள் செய்யமாட்டார்கள்.

### பாடல்: 33 மலஜலம் கழிக்கும்திசை

**பகல்தெற்கு நோக்கார்; இராவடக்கு நோக்கார்**
**பகல்பெய்யார் தீயுனுள் நீர்.**

பொருள்: பகலில் தெற்கு நோக்கியும், இரவில் வடக்கு நோக்கியும் அமர்ந்து மலஜலம் கழியார். பகல்பொழுதில் தீயினுள் நீர் ஊற்றார்.

### பாடல்: 34 மலஜலம் கழிக்கும்போது

**பத்துத் திசையும் மனத்தான் மறைத்தபின்**
**அந்தரத் தல்லால் உமிவோ டிருபுலனும்**
**இந்திர தானம் பெறினும் இகழலரே**
**தந்திரத்து வாழ்த்து மென்பார்.**

பொருள்: பத்துத் திசையும் மறைத்திருப்பதாக மனதால் பாவித்து அந்தரத்தில் செய்வதாக நினைத்து எச்சில் உமிழ்தலும் மலஜலம் கழித்தலும் செய்ய வேண்டும்.

### பாடல்: 35 வாய் கழுவக்கூடாத நிலைகள்

**நடைவரவு நீரகத்து நின்றுவாய் பூசார்;**
**வழிநிலை நீருள்ளும் பூசார்; மனத்தால்**
**வரைந்து கொண்ட ல்லது பூசார்; கலத்தினால்**
**பெய்பூச்சுச் சீரா தெனின்.**

பொருள்: நீர்நிலையில் நின்றுகொண்டோ நடந்துகொண்டோ வாய் அலம்புதல் கூடாது. மனத்தால் பத்துத் திசையும் மறைத்து அந்தரத்தில் செய்வதாகவே பாவித்துச் செய்ய வேண்டும். பாத்திரத்தில் நீர் எடுத்து வாய் கழுவ வேண்டும்.

### பாடல்: 36 தவிர்க்க வேண்டிய சில

**சுடரிடைப் போகார்; சுவர்மேல் உமியார்;**
**இடரெனினும் மாசுணி தங்கீழ்மேற் கொள்ளார்;**
**படைவரினும் ஆடை வளியுரைப்பப் போகார்;**
**பலரிடை ஆடை உதிரார்ே; என்றும்**
**கடனறி காட்சி யவர்.**

பொருள்: பொறுப்புடைய அறிவுடையவர், ஒருவர் அமர்ந்து இருக்கும்பொழுது அவருக்கும் விளக்குக்கும் இடையில் போகமாட்டார்; சுவரின் மேல் எச்சில் உமிழமாட்டார்; இடர்வரினும் தன் அழுக்கான கீழ் ஆடையை மேலே உடுத்தார்; எவ்வளவு நெருக்கடி வந்தாலும் தாம் உடுத்தி இருக்கும் ஆடைக்காற்று பிறர்மேல் படுமாறு உராய்ந்து செல்ல மாட்டார்; பலர் முன்னிலையில் ஆடையை உதறமாட்டார். (அவிழ்த்து உடுத்த மாட்டார்.)

### பாடல்: 37 நினைக்கவும் கூடாதன சில

**பிறர்மனை கள்களவு சூது கொலையோடு**
**அறனறிந்தார் இவ்வைந்தும் நோக்கார்; திறனிலனென்று**
**எள்ளப் படுவதூஉ மன்றி நிரயத்துச்**
**செல்வழி உய்த்திடுத லால்.**

பொருள்: அறமறிந்தவர்கள் பிறர் மனைவி, மது, திருட்டு, சூது, கொலை இந்த ஐந்தையும் மனத்தாலும் நினைக்க மாட்டார்கள். (அடைவோம் என்று ஆசைப்பட்டால், ஒழுக்கங்கெட்டவன் என்று) சமூகத்தால் இகழப்படுவதுமட்டுமின்றி, நரகத்திற்குச் செல்லும் பாதையில் சேர்த்துவிடும் என்று (இவற்றை (மனத்தால் நினைக்கவும் மாட்டார்கள்.)



**இந்தநீ துவம்ப தத்தி னிலட்சியப் பொருளா மென்றும்**
**பந்தமில் பிரம மேதற் பதந்தனி லிலட்சி யார்த்தம்**
**அந்தமாஞ் சீவ னீச னவர்களே வாச்சி யார்த்தம்**
**சந்ததம் பேத மாவார் தமக்கயிக் கியங்கூ டாதே. (69)**

**இந்த நீ த்வம் பதத்தின் இலட்சியப் பொருளாம் என்றும்**
**பந்தம்இல் பரமமே தத்பதம்தனில் இலட்சியார்த்தம்**
**அந்தமாம் சீவன் ஈசன் அவர்களே வாச்சியார்த்தம்**
**சந்ததம் பேதம் ஆவார் தமக்கு அயிக்கியம் கூடாதே.**
(தத்துவ விளக்கப்படலம் பாடல்- 69)



ஸ்ரீதாண்டவராய ஸ்வாமிகள்
அருளிச்செய்த



# கைவல்ய நவநீதம்



விளக்கி அருளியவர்:
**பூஜ்யஸ்ரீ ஓங்காராநந்த மஹாஸ்வாமிகள்**



**பதவுரை:**

**இந்த நீ-** ஸத், சித், ஆனந்தம், ஸமம், ஸ்திரம், ஸாக்ஷி, ஏகம், நித்யம், வ்யாபக ஆன்மாவாகிய நீ, உடல், மனம், புத்தியை நீக்கிய, உயிரிடத்தில் இருக்கின்ற தூய உணர்வாகிய நீ; **த்வம் பதத்தின் இலட்சியப் பொருளாம்-** தத் த்வம் அஸி என்னும் மஹாவாக்கியத்தின், த்வம் என்ற சொல்லின் லக்ஷயப் பொருளாகும். **என்றும் பந்தம்இல் பிரமமே-** எக்காலத்திலும் பந்தம் அற்ற ப்ரஹ்மமே (இறைவனிடத்தில் இருக்கும் தூய உணர்வே); **தத்பதம்தனில் இலட்சியார்த்தம்** -மஹாவாக்கியத்தின் தத்பதத்தின் லக்ஷ்யார்த்தம் ஆகும். **அந்தமாம்** - அறிவினால் முடிவினையுடைய; **சீவன் ஈசன் அவர்களே** - ஜீவன், ஈச்வரன் என்பது; **வாச்சியார்த்தம்-** சொற்பொருளாகும்; **சந்ததம் பேதம் ஆவார்** - வ்யவகாரத்தில், வாச்சியார்த்த த்ருஷ்டியில், எப்பொழுதும் ஜீவனுக்கும், ஈச்வரனுக்கும் வேற்றுமை உள்ளது; **தமக்கு அயிக்கியம் கூடாதே-** ஈச்வரனுக்கும், ஜீவனுக்கும் ஒன்றாக இருக்கும் தன்மை என்பது வ்யவகாரத்தில் கிடையாது.

**பொழிப்புரை:**

ஸத், சித், ஆனந்தம், ஸமம், ஸ்திரம், ஸாக்ஷி, ஏகம், நித்யம், வ்யாபக ஆன்மாவாகிய நீ, உடல், மனம், புத்தியை நீக்கிய, உயிரிடத்தில் இருக்கின்ற தூய உணர்வாகிய நீ, தத் த்வம் அஸி என்னும் மஹாவாக்கியத்தின், த்வம் என்ற சொல்லின் லக்ஷயப் பொருளாகும். (நீ என்ற சொல்லைக் குருநாதர் சொல்லி இருக்கிறார். நாம் 'நான்' என்பது தூய உணர்வு மட்டுமே என்று புரிந்து கொள்ள வேண்டும்.) எக்காலத்திலும் பந்தம் அற்ற ப்ரஹ்மமே (இறைவனிடத்தில் இருக்கும் தூய உணர்வே) மஹாவாக்கியத்தின் தத் பதத்தின் லக்ஷ்யார்த்தம் ஆகும்; அறிவினால் முடிவினையுடைய ஜீவன், ஈச்வரன் என்பது சொற்பொருளாகும். வ்யவகாரத்தில், வாச்சியார்த்த த்ருஷ்டியில், எப்பொழுதும் ஜீவனுக்கும், ஈச்வரனுக்கும் வேற்றுமை உள்ளது;

வ்யவகாரத்தில் ஜீவனுக்கும், ஈச்வரனுக்கும் ஒன்றாக இருக்கும் தன்மை என்பது கிடையாது.

**விளக்கவுரை:**

59வது பாடலில் சொன்ன கருத்தை மீண்டும் இந்தப் பாடலில் நினைவுபடுத்துகிறார் தாண்டவராய ஸ்வாமிகள்.

எல்லாம் வல்ல, அனைத்து ஆற்றலும் மிக்க, அனைத்து நற்குணங்களும் ஒருங்கே அமைந்த ஆண்டவனும் அடிப்படையில் தூய உணர்வாகவே இருக்கிறான். மிகவும் குறைந்த அறிவுடைய, குறைந்த சக்தியுடைய, நிலையில்லாத, மாறிக் கொண்டே இருக்கிற உயிரின் அடிப்படைத் தத்துவமும் தூய உணர்வே ஆகும்.

ஈச்வரனும் அடிப்படையில் சுத்தசைதன்யம்தான். ஜீவனும் சுத்தசைதன்யம்தான். உயர்ந்ததாக ஒன்றையும், தாழ்ந்ததாக ஒன்றையும் தூய உணர்வின்மீது கற்பிப்பது மாயை, என்பது அத்வைத வேதாந்த சித்தாந்தத்தின் முடிவு.

தூய உணர்வில் பல வகையான கற்பனைகளை உண்டுபண்ணக்கூடிய ஆற்றல், அதாவது இறைவன் என்றும், உயிர்கள் என்றும், உலகம் என்றும், பந்தம் என்றும், முக்தி என்றும் கற்பனைகளை உண்டு பண்ணும் ஆற்றல் மாயைக்கு இருக்கிறது.

உண்மையின் கோணத்தில் சிந்திக்கும்பொழுது, ஜீவனும் ஈச்வரனும் ஒன்று. நடைமுறைக் கோணத்தில் சிந்திக்கும்பொழுது இருவரும் வேறு. வாச்யார்த்தம் மாயாஜாலம். லக்ஷ்யார்த்தத்தில்தான் ஐக்யம் என்பது ஏற்படும்.

அத்வைதத்தை விசாரம் செய்கிறோம், அத்வைதத்தைப் புரிந்து கொள்கிறோம். ஆனால் வ்யவகாரத்தில் ஈச்வர பக்தியுடனேதான் இருக்கிறோம். ஈச்வர பக்தியினால்தான் நமக்கு இந்த ஞானம் கிடைத்தது. ஆகையினால் வ்யவகாரத்தில் நாம் நன்றியுணர்வோடு இருக்கிறோம். ப்ரச்சனைகளுக்கு அளவுக்கு மீறின முக்கியத்துவம் தருவதில்லை. பக்தியுடன் இருந்து, நல்ல தர்மங்களைக் கடைப்பிடித்து, ஆனால் இவை உண்மையல்ல என்கிற அறிவுடன் வாழ்கிறோம்.

மேல் மனம் வாழ்க்கைக்குத் தேவையானவற்றை சம்பாதிக்கிறது, உலக விஷயங்களைப் பார்க்கிறது. நடுமனம் ஈச்வர பக்தி, தர்மானுஷ்டானம், நல்ல குணங்களைக் கடைப்பிடிக்கிறது. ஆழ்மனம், மனமே இல்லை என்கிற அறிவுடன் இருக்கிறது, தத்துவ ஞானத்தில் நிலைத்திருக்கிறது.

ஞானத்தினால் ஜீவன், ஈச்வரன் என்கிற இரண்டும் அழிந்துவிடுகிறது. ஈசன், ஜீவன் என்பது தத், த்வம் பதங்களுக்கு சொற்பொருளாகும். ஆனால் விசாரம் செய்தால் ஜீவனும் இல்லை, ஈச்வரனும் இல்லை. ப்ரஹ்மைவ ஸத்யம் । அஹம் ப்ரஹ்மாஸ்மி । ஈச்வர: அபி ப்ரஹ்ம । அஹம் அபி ப்ரஹ்ம । ஜகத் ஸர்வம் ப்ரஹ்மம் ।

மெய்ப்பொருளில் கடவுள் என்பவர் கற்பிக்கப்பட்டிருக்கிறார்; உயிர்கள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன; உலகங்கள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, மெய்ப்பொருளை மட்டும் உணர்ந்து கொண்டு, பொய்ப்பொருளாகிய, உண்மையில்லாததாகிய இறைவன், உயிர்கள், உலகம் இவைகளுக்குக் கொடுக்கக்கூடிய முக்கியத்துவத்தை அறவே நீக்கிவிட்டால் அதுவே ஜீவன்முக்தி, மோக்ஷம் என்பது அத்வைத வேதாந்தத்தின் உபதேசம்.

வ்யவகார த்ருஷ்டியில், ஜீவனும், ஈச்வரனும் வேறு வேறு. ஆனால் பாரமார்த்திக த்ருஷ்டியில் பேதம் என்பது கிடையாது. கடவுள் வேறு, உயிர்கள் வேறு, வாழ்க்கை வேறு, இன்பம் வேறு, துன்பம் வேறு என்பதுதான் வ்யவகாரம். உண்மையில் இவையெல்லாம் இல்லை என்பதே பாரமார்த்திகம்.

சூரியன் காலையில் உதிக்கிறான், மாலையில் மறைகிறான் என்பது வ்யாவஹாரிகம். உண்மையில் சூரியன் இருக்கும் இடத்திலேதான் இருக்கிறான், பூமிதான் சுற்றுகிறது என்பது பாரமார்த்திகம். பாரமார்த்திக உண்மைக்கே நாம் மதிப்புத்தர வேண்டும்.

வ்யாவஹாரிக ஸத்யத்திற்கு முக்கியத்துவம் தந்து கொண்டிருந்தால், ஸம்ஸாரம் இருந்து கொண்டிருக்கும். இதற்கு முக்கியத்துவம் கொடுக்கவில்லையெனில், ஸம்ஸார நிவ்ருத்தி.

ஞானத்தினால் ஸம்ஸாரத்தை நீக்க வேண்டும். அறிவினால் நம்முடைய தொடர் துன்பத்தைத் தொலைக்க வேண்டும். எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருளை மெய்ப்பொருளாகக் கண்டோமேயானால், வேற்றுமை என்பது ஒரு மாயத்தோற்றம், இருப்பது இரண்டற்ற ஒன்றே என்பது விளங்கும்.

-தொடரும்






நாம் அனுபவிக்கின்ற இன்பம் நாமே என்கிறது ஶாஸ்த்ரம்.

நாம் எப்பொழுதும் இன்பமாக இருக்க விரும்புகிறோம். அவ்வப்போது அல்ல, எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் இன்பமாக இருக்கவே விரும்புகிறோம்.

இன்பம் நம்முடைய இயல்பாக இல்லையெனில், நம்மால் அதனை அடைய முடியாது. ஶாஸ்த்ரத்தின் நோக்கில், நாமே அந்த இன்பம். இன்பம் என்பது அனுபவத்தைக் குறிக்கின்ற ஒரு சொல்லாக இருக்கிறது.

இதைக்காட்டிலும் சிறந்தது - குறையுடைய தன்மையிலிருந்து விடுதலை, தேவைகளிலிருந்து விடுதலை, ஏதோ ஒன்றாக ஆக விரும்புகின்ற தன்மையிலிருந்து விடுதலை, இந்த விடுதலையே மோக்ஷம், அதுவே உங்களது உண்மை இயல்பு.

உங்களுடைய நேசத்திற்குரிய பொருள் உண்மையில் நீங்களே என்பதை ஶாஸ்த்ரம் நிரூபிக்கிறது. நீங்கள் விரும்புவது முழுமை; குறையுடைய தன்மையிலிருந்து விடுதலை. இதற்கு பூர்ணத்வம் என்று பெயர். இந்த பூர்ணத்வம் (முழுமை) - இதைத்தான் நீங்கள் விரும்புகிறீர்கள், அது நீங்களே.

உங்களைப் பற்றிக் குறைவாக எண்ணிக்கொள்வதற்குப் பல காரணங்கள் இருப்பினும், நீங்கள் முழுமையானவர் என்கிறது வேதம். உலகம் என்ற அமைப்பில் உள்ள விஷயங்களைப் பார்க்கும் பொழுது, நாம் எவ்வளவு சிறியவர்கள் என்று எண்ணுவதைத் தவிர்க்க முடியாது. ஆனால், அதே நேரத்தில், நீங்கள் முழுமையானவர், நீங்களே அனைத்தும் என்று சொல்வதற்கும் காரணம் இருக்கிறது.

உங்களுடைய பார்வையைச் சற்று மாற்றிக்கொள்ள வேண்டி இருக்கிறது. ஒரு விஷயத்தைப் பற்றி முழுமையாக அறிந்துகொள்ளாமல், ஒரு கோணத்தை மட்டுமே அறிந்து, அதைப் பற்றிக் கருத்துக் கூறுவது பொருந்தாது.

ஒரு கலைஞர் ஓவியம் ஒன்றை வரைந்திருந்தார். அது என்ன என்று எனக்கு விளங்கவில்லை. அவரிடம் கேட்டபோது, அது மேஜை என்றார். அதைப் பார்த்தால் மேஜை போன்று இல்லை என்று கூறியவுடன், அவர் - மேஜைக்கு அடியில் தரையில் படுத்துக்கொண்டு, மேஜையைப் பார்த்தால் இவ்விதம் காட்சியளிக்கும் என்று கூறினார்.

அந்தக் கலைஞர் அதனைப் புரிந்துகொள்வதற்குக் காரணம், அவருக்கு மேஜையைப் பற்றிய முழுமையான பார்வை இருப்பதே ஆகும்.

ஒரு பொருளைப் பற்றிய முழுமையான பார்வை இல்லாமல், அதைப் பற்றி அபிப்ராயம் கொள்ளுதல் தவறு. ஓர் இயந்திரத்தைப் பற்றி முழுமையாக அறிந்திருந்தால்தான், ஒரு குறிப்பிட்ட உதிரிபாகம் எங்கு பொருந்தும் என்பதைப் புரிந்துகொள்ள முடியும்.

ஒரு குறிப்பிட்ட கோணத்திலிருந்து பார்க்கும்பொழுது, நீங்கள் குறையுடையவர் போன்று தோன்றலாம்.

நீங்கள் உங்களைப் பற்றி முழுமையாக அறியாததால்தான் நீங்கள் சிறியவர், குறையுடையவர் என்று உங்களைப் பற்றி எண்ணிக்கொள்கிறீர்கள்.

முழுமையான கோணத்தைப் பார்த்தால்தான் உங்களைப் பற்றிய உங்களது தீர்மானம் சரியா என்பதைப் புரிந்துகொள்ள முடியும்.

(அன்பை மேலும் அறிவோம்)

## செப்டம்பர் மாதம் நிகழ்ந்த வகுப்புகள்

| பொருள் | ஆசார்யர் | வகுப்பு |
|---|---|---|
| ஈஶாவாஸ்யோபநிஷத் | ஸ்ரீ ஸ்வாமீ ஸமாநந்தர் | 2 |
| கேனோபநிஷத் | ஸ்ரீ ஸ்வாமீ ஸமாநந்தர் | 8 |
| ஸாதநபஞ்சகம் (முகாம்) | ஸ்ரீ ஸ்வாமீ ஸமாநந்தர் | 7 |
| அந்தர்யோகம் | ஸ்ரீ ஸ்வாமீ ஸமாநந்தர் | 1 |
| பஞ்சதஶீ | ஸ்ரீ ஸ்வாமீ பூர்ணாநந்தர் | 5 |
| கைவல்ய நவநீதம் | ஸ்ரீ ஸ்வாமீ பூர்ணாநந்தர் | 3 |
| தர்மதீபிகா (ஆச்ரமம்) | ஸ்ரீ ஸ்வாமீ பூர்ணாநந்தர் | 3 |
| தர்மதீபிகா (சத்திரப்பட்டி) | ஸ்ரீ ஸ்வாமீ பூர்ணாநந்தர் | 3 |
| தர்மதீபிகா (ஆச்ரமம்) | ஸ்ரீ ஸ்வாமீ குருக்ருபாநந்தர் | 1 |
| தர்மதீபிகா (சத்திரப்பட்டி) | ஸ்ரீ ஸ்வாமீ குருக்ருபாநந்தர் | 1 |
| ஆத்மவித்யா வகுப்புகள் | (வீடியோ வகுப்புகள்) | 18 |
| யோகாஸநம் | மாஸ்டர் ஸ்ரீ தியாகராஜன்ஜி | 30 |
| | மொத்த வகுப்புகள் | 82 |

## வேதநெறி சந்தா விவரம்

**5 ஆண்டு ரூ. 3000/-**
**1 ஆண்டு ரூ. 600/-**
**1 இதழ் ரூ. 50 /-**

சந்தா மற்றும் நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி

**Sri Swami Chidbhavananda Ashramam**
P.B. No. 23, Chatrapatti Road, Vedapuri,
Theni-625 531.
☎ +91 - 4546 - 253 908 / 97517 51910

சந்தா தொகையை
**Vedanta Sasthra Prachara Trust,** Theni
என்ற பெயருக்கு அனுப்ப வேண்டுகிறோம்.

வேதநெறி மின்னிதழை (e-book) இலவசமாகப் பெற விரும்புவோர் தங்கள் வாட்ஸ் அப் அல்லது மெயில் விவரத்தை
swamiomkarananda@gmail.com
என்ற மின்னஞ்சலுக்கு அனுப்பவும்.
www.vedaneri.org

Our YouTube Channels

- Swami Omkarananda
- Vedapuri Events

## ஐப்பசி மாத நிகழ்ச்சிகள்

**ஐப்பசி மாதப்பிறப்பு சிறப்பு வழிபாடு**
ஐப்பசி 01, செவ்வாய் (18.10.2022)
காலை 07.00 - 08.30

**தீபாவளிப் பண்டிகை சிறப்பு வழிபாடு**
ஐப்பசி 07, திங்கள் (24.10.2022)
காலை 07.00 - 08.30

**ஸூர்யக்ரஹணம்**
ஐப்பசி 08, செவ்வாய் (25.10.2022)
மாலை 05.14 - 05.42
மாலை 7.00 மணிக்கு நடைதிறப்பு, புண்யாஹவாசனம்
7.30 மணி அபிஷேகம், அலங்காரம்
8.30 மணி சாயங்கால பூஜை

**ஸ்ரீஸ்கந்த ஷஷ்டி சிறப்பு வழிபாடு**
ஐப்பசி 13, ஞாயிறு (30.10.2022)
காலை 11.00 - 01.00

**ஸ்ரீகாசி விச்வநாதர் அந்நாபிஷேகம் சிறப்பு வழிபாடு**
ஐப்பசி 21, திங்கள் (07.11.2022)
காலை 09.00 - 12.30

**தர்மஸ்ரீசாஸ்வத க்ஷேம நிதி புரவலர் தினம்**
ஐப்பசி 23, புதன் (09.11.2022)
காலை 7.00 - 1.00
புரவலர்களுக்கான சிறப்பு ஸங்கல்பம், ஆதிகுரு ஸ்ரீப்ரஜ்ஞா தக்ஷிணாமூர்த்திக்கு விசேஷ அபிஷேகம், தங்க கவச அலங்காரம், தீபாராதனை, அந்நதானம்.

# திருக்குறள்

## பொருட்பால்-அதிகாரம் 98

# பெருமை



முன்னுரை:-

- இவ்வதிகாரம் பொருட்பால் ஒழிபியலில் மூன்றாவது அதிகாரமாக அமைந்துள்ளது.
- உயர்ந்த குடியில் உள்ளோரின் பண்புகளை எடுத்து இயம்பும் பொருட்டு இதற்கு முந்தைய மானம் என்ற அதிகாரத்தில் மானம் என்ற உயர்ந்த குணம் கூறப்பட்டது.
- மானம் என்ற பண்புடையவர்களுக்கு மேலும் நிலைத்து நிற்க வேண்டிய தன்மைகள் சிலவற்றை வழங்கும் பொருட்டு மானம் என்ற அதிகாரத்திற்குப்பின் பெருமை என்ற இவ்வதிகாரம் அமைக்கப்பட்டுள்ளது.
- பெருமை என்றால் மிகச் சிறந்த நற்குணங்களால் உயர்ந்த நிலையில் உள்ளோரின் தன்மைகள்.
- செயற்கரிய செயல்களைச் செய்யும் திறன், பிறரைக் குறைகூறும் தன்மை இல்லாமை, செருக்கின்மை போன்ற தலையாய குணங்கள் தன்னிடம் இருப்பதால் தன்னை உயர்வாக எண்ணும் உணர்வு பெருமை.

இவ்வதிகாரத்தில்

- பெருமையின் சிறப்பும்,
- உயர்குணமுள்ளோர் கீழ்நிலையில் இருந்தாலும் சிறியவராகார், அக்குணமில்லார் மேல் நிலையில் இருந்தாலும் உயர்ந்தவராகார் என்ற கருத்தும்,
- பெருமைக்கான காரணமும்,
- பெருமையுடையவரின் செய்தியும் (ஒழுக்கமும்),
- பெருமையில்லாதவரின் செய்தியும் (ஒழுக்கமும்),
- பெருமைக்குரியவரின் செயல்களையும் சிறுமைக்குரியவரின் செயல்களையும் இணைத்துக் கூறியும் கருத்துக்கள் இவ்வதிகாரத்தில் வள்ளுவரால் வழங்கி அருளப்பட்டுள்ளன.

ஸ்ரீஸ்வாமி ஞானசிவாநந்த

**ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை இளிஒருவற்கு அஃதிறந்து வாழ்து மெனல்.** (குறள்: 971)

**ஒருவற்கு** - ஒருவனுக்கு, **ஒளி** - புகழ் (பெருமை) என்பது, **உள்ள வெருக்கை** - செயற்கரிய செயல்களைச் செய்வோம் என்று எண்ணும் ஊக்க மிகுதியேயாகும், **ஒருவற்கு** - ஒருவனுக்கு, **இளி** - இழிவு என்பது (என்னவெனில்), **அஃதிறந்து** - அச்செயலைச் செய்யாமல் விட்டுவிட்டு, **வாழ்துமெனல்** - உயிர் வாழ்வோம் என்று எண்ணுதலாகும்.

ஒருவனுக்கு புகழ் (பெருமை) என்பது செயற்கரிய செயல்களைச் செய்வோம் என்று எண்ணும் ஊக்க மிகுதியேயாகும். ஒருவனுக்கு இழிவு என்பது (என்னவெனில்) அச்செயலைச் செய்யாமல் விட்டுவிட்டு உயிர் வாழ்வோம் என்று எண்ணுதலாகும்.

**பெருமைக்குக் காரணம் செயற்கரிய செயல் செயவதில் அதிக ஊக்கம். சிறுமைக்குக் காரணம் அதைச் செய்யாமல் உயிர்வாழ்தல் என்பது கருத்து.**

**இக்குறட்பாவில் பெருமையின் சிறப்புக் கூறப்பட்டது.**

**பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமை யான்.** (குறள்: 972)

**எல்லா உயிர்க்கும்** - மனிதர்களாகப் பிறந்த எல்லா உயிர்களுக்கும், **பிறப்பு** - பிறப்பு என்பது, **ஒக்கும்** - ஒரே தன்மையுடையது, **செய்தொழில்** - (ஆனால் அவ்வுயிர்கள்) செய்யும் தொழில்கள், **வேற்றுமையான்** - (உயர்வு, தாழ்வு என்று) வேறுபடுவதால், **சிறப்பு** - பெருமை, சிறுமை எனப்படும்) சிறப்பியல்புகள், **ஒவ்வா** - ஒத்திருக்காதனவாம்.

மனிதர்களாகப் பிறந்த எல்லா உயிர்களுக்கும் பிறப்பு என்பது ஒரே தன்மையுடையது. ஆனால் அவ்வுயிர்கள் செய்யும் தொழில்கள் உயர்வு, தாழ்வு என்று வேறு படுவதால், பெருமை - சிறுமை எனப்படும் சிறப்பியல்புகள் ஒத்திருக்காதனவாம்.

**பிறப்பு ஒரே தன்மையாயினும் சிறந்த செயலே சிறப்பைத் தரும் என்பது கருத்து.**

**மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும் கீழல்லார் கீழல் லவர்.** (குறள்: 973)

**மேலல்லார்** - (செயற்கரிய செயல்களைச் செய்யாத) சிறியவர்கள், **மேலிருந்தும்** - உயர்ந்த நிலையில் (உயர்பதவி முதலியவற்றில்) இருந்தாலும், **மேலல்லர்** - பெருமைக்குரியவர் ஆகமாட்டார்கள், **கீழல்லவர்** - செயற்கரிய செயல்களைச் செய்த பெரியவர்கள், **கீழிருந்தும்** - தாழ்ந்த நிலையில் இருந்தாலும், **கீழல்லார்** - (பெருமைக்குரியவர்கள்தான்) சிறியவராகார்.

செயற்கரிய செயல்களைச் செய்யாத சிறியவர்கள், உயர்ந்த நிலையில் உயர்பதவி முதலியவற்றில் இருந்தாலும், பெருமைக்குரியவர் ஆகமாட்டார்கள், செயற்கரிய செயல்களைச் செய்த பெரியவர்கள், தாழ்ந்த நிலையில் இருந்தாலும், (பெருமைக்குரியவர்கள் தான்) சிறியவராகார்.

**அரும் செயல் ஆற்றுவோர் என்றும் மேலானவரே. அரும் செயல் ஆற்றாதார் கீழானவரே என்பது கருத்து.**

**2,3 ஆகிய இரண்டு குறட்பாக்களில் குடிப்பிறப்பு மட்டும் இருந்தாலும், செல்வம் மட்டும் இருந்தாலும், பெருமை உண்டாகாது என்பது சொல்லப்பட்டது.**

ஓம்
ஸ்ரீகுருப்யோ நம:

# ஆன்மிக ஸாதனைப் பயிற்சி வகுப்பு

**(அந்தர்யோகம்)**

இடம் :
**ஸ்ரீஸ்வாமீ சித்பவாநந்த ஆச்ரமம்,**
வேதபுரீ, தேனி.
நாள் :
**06.11.2022, ஞாயிற்றுக்கிழமை**
நேரம் :
**காலை 10.00 முதல் 1.00 மணி வரை**

அனைவரும் வருக! அருளின்பம் பெறுக!



# தைத்திரீய உபநிஷத்

விளக்கி அருளியவர்
**பூஜ்யஶ்ரீ ஓங்காரானந்த மஹாஸ்வாமிகள்**

**வேதத்தை ஓதுவதற்குரிய ஆறு விதிகள்**

ஶிக்ஷா என்பது எழுத்துகளை எவ்வாறு உச்சரிக்க வேண்டும் என்று உபதேசிக்கும் ஶாஸ்த்ரம் (ஒலியியல், Phonetics). ஶிக்ஷா என்பதே நீண்டு ஶீக்ஷா என்று ஆகியிருக்கிறது.

**शीक्षां व्याख्यास्यामः। वर्णः स्वरः। मात्रा बलम्। साम: सन्तानम्। इत्युक्तः शीक्षाध्यायः। १**

**ஶீக்ஷாம் வ்யாக்யாஸ்யாம:। வர்ண: ஸ்வர:। மாத்ரா பலம்। ஸாம: ஸந்தாநம்। இத்யுக்த: ஶீக்ஷாத்யாய:। 1**

शीक्षां **ஶீக்ஷாம்** – உச்சாரண ஶாஸ்த்ரம் (ஒலியியலை)ப் பற்றி **व्याख्यास्यामः। வ்யாக்யாஸ்யாம:।** – விளக்குவோம்.

ஆதிஶங்கரர் பின்வருமாறு கூறுகிறார் -

अर्थज्ञानप्रधानत्वात् उपनिषदः ग्रन्थपाठे यत्न-उपरमः मा भूत् इति शीक्षाध्यायः आरभ्यते -

**அர்த்தஜ்ஞாநப்ரதாநத்வாத் உபநிஷத: க்ரந்தபாடே யத்ந-உபரம: மா பூத் இதி ஶீக்ஷாத்யாய: ஆரப்யதே -**

உபநிஷத்தைக் கற்கும்பொழுது, அர்த்தத்தைத் தெரிந்துகொள்வதுதானே முக்கியம், மந்த்ரத்தை ஸ்வரத்துடன் பாராயணம் செய்வது தேவையில்லை என்று சிலர் எண்ணக்கூடும். அவ்வாறு எண்ணக்கூடாது. ஸ்வரத்துடன் மந்த்ரத்தை பாராயணம் செய்வதற்கும் அநுக்ரஹஶக்தி இருக்கிறது.

**வேதத்தை ஓதியே வீடுபெற்றார்களே** என்பது திருமூலர் வாக்கு.

நம்முடைய பண்பாட்டில், முதலில் ஶப்தக்ரஹணம் (மனப்பாடம் செய்தல், உருப் போடுதல்), பிறகு அர்த்தக்ரஹணம் (பொருளை அறிந்துகொள்ளுதல்).

ஐந்து வயது குழந்தைக்குக்கூட திருக்குறளை மனப்பாடம் செய்ய வைத்துவிடலாம். பிறகு, அர்த்தத்தை விளக்க வேண்டும்.

ஶாஸ்த்ரத்தின் சொற்கள், வாக்கியங்கள் மனதில் ஆழமாகப் பதிந்துவிட்டால், பொருளை உணர்ந்து மனதில் இருத்திக்கொள்வது எளிதாக இருக்கும். ஒரே சொல்லாட்சி வேறு இடங்களில் வேறுவிதமாக வருவதையும் ஒப்பிட்டு நோக்க முடியும்.

உதாரணத்திற்கு,

**எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.**

என்ற குறட்பா அறத்துப்பாலிலும்,

**எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.**

என்ற குறட்பா பொருட்பாலிலும் வருகிறது.

இதனை ஆராய்வதற்கு, முதலில் மனப்பாடம் செய்திருக்க வேண்டும் (சொற்கள் பரிச்சயமாக இருக்க வேண்டும்).

நவீன கல்வித்திட்டத்திலும், வாழ்க்கைமுறையிலும் நாம் மனப்பாடம் செய்கின்ற ஆற்றலையும், ஞாபகசக்தியையும் பெருமளவில் இழந்துவிட்டோம்.



நல்ல நினைவாற்றலுடன் கூடியவனால்தான், ஒரு குறிப்பட்ட சூழ்நிலையில் இதுபற்றி ஶாஸ்த்ரம் என்ன சொல்கிறது என்பதை நினைவுகூர முடியும்.

சரியான நேரத்தில் நினைவுக்கு வராத வித்தையினால் பயனில்லை.

உபநிஷத்தில் ஸ்வரம் இருந்தால், அதனை ஸ்வரத்துடன் பாராயணம் செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும்.

**वर्णः வர்ண:** – (அ முதலான) எழுத்து **स्वरः। ஸ்வர:** – ஸ்வரம்

ஒவ்வொரு எழுத்தையும் பதினெட்டுவிதமாக உச்சரிக்கலாம் என்று கூறுவர். உபாஸனைகளில் மாத்ருகாக்ஷர ந்யாஸங்கள் உள்ளன.

**உச்சை: உதாத:। நீசை: அநுதாத:।**

மேலே தூக்கிச் சொல்லுதல் உதாத: என்றும், கீழே இறக்கிச் சொல்லுதல் அநுதாத: என்றும், நடுவில் ஸ்வரமில்லாமல் சொல்லுதல் ஸ்வரிதம் என்றும், அதனையே நீட்டிச் சொல்லுதல் தீர்கஸ்வரிதம் என்றும் சொல்லப்படும். இது பாணினியின் வ்யாகரணப்படி கூறப்படுவது.

ஆனால், வேதம் கற்கின்ற ஸம்ப்ரதாயத்தில் –

ஸ்வரமில்லாமல் கூறுவது அநுதாத: என்றும், கீழே கூறுதல் உதாத: என்றும், மேலே தூக்கிக் கூறுவது ஸ்வரிதம் என்றும், அதனை மேலும் நீட்டிச் சொல்லுதல் தீர்கஸ்வரிதம் என்றும் கூறப்படும்.

ஸாம வேதத்தில் உள்ள ஸ்வரங்களையும், ஸங்கீதத்தில் உள்ள ஸ்வரங்களையும் ஒப்பிட்டு நூல்கள் இயற்றப்பட்டுள்ளன.

எழுத்தை உச்சரிக்கும்பொழுது கவனமாக இருக்க வேண்டும் என்பதே இதன் தாத்பர்யம்.

**मात्रा மாத்ரா** – எழுத்துகளை உச்சரிக்கும் கால அளவு, **बलम्। பலம்** – எழுத்துகளுக்குக் கொடுக்க வேண்டிய அழுத்தம்.

**மாத்ரா: ஹ்ரஸ்வ-தீர்க-ப்லுதா:।**

மாத்ரா என்பது ஓர் எழுத்தின் கால அளவு. (குறில், நெடில், மேலும் நீட்டிச் சொல்லுதல்)

அழுத்தம் கொடுத்துச் சொல்லுவதில் அல்பப்ராணம், மஹாப்ராணம் என்ற வகைகள் இருக்கின்றன.

அவற்றையும் எவ்வளவு அழுத்தம் கொடுக்க வேண்டுமோ, அந்த அளவு கொடுத்து, முறையாக உச்சரிக்க வேண்டும்.

**साम: ஸாம** – எழுத்துகளைச் சீராக உச்சரிக்கும் வேகம், **सन्तानम्। ஸந்தாநம்** – எழுத்துப்புணர்ச்சி.

**ஸாம வர்ணாநாம் மத்யம-வ்ருத்தி-உச்சாரணம் ஸமதா।**

ஒரே மாதிரி சீராகச் சொல்லுதல் (தண்டவாளத்தில் ரயில் செல்வதைப்போன்று).

**ஸந்தாநம்** – எழுத்துப்புணர்ச்சி. (ஸந்ததி: ஸம்ஹிதா)

ஸந்தியில் எழுத்துகளைச் சேர்த்தல், பிரித்தல் ஆகியவற்றைச் சரியாகச் செய்ய வேண்டும்.

இடையில் எந்த இடத்தில் மூச்சு வாங்க வேண்டும் என்பதற்கு க்ரமங்கள் இருக்கின்றன. மூச்சு வாங்கும்பொழுது, எழுத்துகளைச் சரியான பொருளில் வரும்படி ஸந்தி பிரித்து உச்சரிக்க வேண்டும்.

வேதத்தில் கனபாடம் படிப்பவர்கள், ஸந்தியைச் சரியாகப் பிரிக்கக் கற்றுக்கொள்வர், சில எழுத்துகள் மாறும். அவற்றையும் கவனித்துச் சொல்வர்.

ஒருமுகப்பாட்டுடன் கவனித்துச் சொல்லுதல், மனதிற்குச் சிறந்ததொரு பயிற்சியாகும்.

**इति இதி** – இவ்வாறு, **शीक्षाध्याय: ஶீக்ஷாத்யாய:** – ஶீக்ஷா ஶாஸ்த்ரமானது, **उक्त: உக்த:** – கூறப்படுகிறது.

–தொடரும்

# Sadhana Panchakam

Transcribed by **Sri M.S. Jagannatha Singh**



**Parama Pujya Sri Swami Paramarthananda**

sadāśiva samārambhām
sankarācārya madhyamām I
asmadăcărya paryantām
vande guru paramparām ||

Now we will look into the vedāntic text Sadhana Pañcakam (Spiritual Discipline in five verses) written by Adi Sankarācārya. A condensed capsule of core spiritual teaching leading to the ultimate spiritual goal of mokşa.

This text is also called Upadeśa Pañcakam meaning spiritual advice in five verses to attain mokṣa or Sopāna Pañcakam-the staircase of five major landings with several steps leading to the higher destination of mokṣa.

We generally talk of getting mokşa-however, peculiarly, mokṣa (root mokş means to give up; mokşa means giving up) is not about getting anything but all about shedding something in our lives through discipline. The next question is-'What are we going to give up?'

According to the scriptures, whatever we are seeking in life-all the basic things are already with us. One fundamental thing that we seek in life, right from our childhood, is security.

'As a baby I felt insecure and therefore I tried to cling on to my mother because through mother there is security.' Later, I sought so many other things all in search of security-money, land, position, possession, relationships.-All of them are triggered by this innermost need of security. Then, the next thing that we seek is peace, and joy or happiness, after that we seek fulfillment. Like this, there are certain basic things which all human beings seek-universally at all times and according to our scriptures all those basic things are 'within' ourselves.

The Chandogya Upanişad gives the example of hiranya nidhi. A poor person is having a very small piece of land who doesn't have enough money to construct a house. Right underneath, under the land, in the earth he has got a nidhi. Nidhi means a treasure of wealth. If he knows that there is nidhi, he will not struggle to find wealth, but as long as he does not know the fact he is going to search outside, and imagine, somebody comes and tells, You need not go after any one, any external source, the money that you seek is already under the ground.

'But, it is not readily available because that treasure is covered by so many layers of mud, rock, and clay-several layers of covering. So, if he has to get that wealth, all he has to do is to remove the cover. It is a process of dis-covering.

'Dissing' the cover, removing the cover. So what he requires is not accession, but removal of what is covering the wealth.

Similarly Vedānta and the entire scriptural literature says that everything that a human being seeks is already within himself.

Peace is within us, security is inside us, ananda is within us-and because the fundamental treasures we seek are inside us only, we are unable to find them outside. Instead of removing the cover and claiming our own wealth, we are searching for these externally and naturally failure is guaranteed.

- to be continued

# Donations Scheme

## மெய்யன்பர்கள் கீழ்க்கண்ட விதங்களில் நன்கொடை வழங்கலாம்.

### வேதாந்த சாஸ்த்ர ப்ரசார ட்ரஸ்ட்

**நன்கொடைத் திட்டங்கள்**

| | |
|---|---|
| தர்மஸ்ரீ சாஸ்வதக்ஷேம நிதி | ரூ. 1,00,000/- |
| சாதுக்கள் பிக்ஷா, அந்நதாநம் (ஒருநாளைக்கு) | ரூ. 9,000/- |
| அதிஷ்டான நைவேத்யம் | ரூ. 500/- |
| ஆத்மவித்யா ஒருநாள் செலவு | ரூ. 11,000/- |
| வேத ஸம்ரக்ஷனம் (ஒருநாளைக்கு) | ரூ. 3,000/- |
| ஸ்ரீகுரு ஸேவா வைப்புநிதி | ரூ. 1,25,000/- |
| வ்ருக்ஷ ஸம்ரக்ஷணம் (ஒருநாளைக்கு) | ரூ. 2,000/- |
| பிக்ஷா வைப்புநிதி | ரூ. 15,000/- |
| ஸ்ரீகுருதக்ஷிணா (தங்களது விருப்பம் போல்) | |

### ஸ்ரீதக்ஷிணாமூர்த்தி ஸேவா ஸமிதி

**நன்கொடைத் திட்டங்கள்**

| | |
|---|---|
| கோபூஜை | ரூ. 200/- |
| அர்ச்சனை | ரூ. 200/- |
| பிறந்தநாள் மற்றும் திருமண நாள் சிறப்பு பூஜை | ரூ. 500/- |
| சிறப்பு அபிஷேகம், அலங்காரம் | ரூ. 2000/- |
| உதயாஸ்தமன பூஜை | ரூ. 5000/- |
| பரிவாரதேவதா பூஜை | ரூ. 1000/- |
| தங்கக் கவசம் | ரூ. 5000/- |
| ஸ்ரீதத்த பாதுகா பூஜை | ரூ. 1500/- |
| ஸ்ரீகங்கா பூஜை (வெள்ளி தோறும்) | ரூ. 500/- |
| ஸ்ரீப்ரதோஷ பூஜை | ரூ. 500/- |
| பசுப்பராமரிப்பு (ஒரு மாதத்திற்கு ஒரு பசுவிற்கு) | ரூ. 3000/- |

## "Sri Guru Seva Corpus Fund"

- This Corpus fund is being created to take care of the daily operational expenses of Pujyasri Omkarananda Mahaswamigal Adhishtanam and Dhyana Mandapam.
- We seek contributions of INR 1.25 Lakhs from 365 donors. This amount will be deposited in the bank and the interest will be used to fund the operational expenses.
- Once the contributions are received from 365 donors, we will not collect any further Corpus amount. So this is a One Time Opportunity to participate and contribute for the daily expenses of Adhishtanam and Dhyana Mandapam.
- So for more than 150 devotees contributed to this corpus.
- The Donor can choose any Day - based on their Birth Month & Star (Based on availability) and Special Sankalpams will be performed on behalf of the Donor and family. Prasadams will be couriered to their Indian address. Therefore please ensure that you provide along with Details of your Contribution, Details of Name, Nakshatram, WhatsApp Number and Indian Address.

**Bank Details : (Transfer in INR from Indian Account)**

| | | |
|---|---|---|
| Account Name | : | Vedanta Sasthra Prachara Trust |
| SB A/C Number | : | 017401000010179 |
| Name of Bank | : | Indian Overseas Bank, Theni. |
| IFSC Code | : | IOBA0000174 |

**FCRA Account Details: (Transfer from NRE or Foreign Currency)**

| | | |
|---|---|---|
| Account Name | : | Vedanta Sasthra Prahara Trust |
| Current A/c Number | : | 40102642887 |
| Name of Bank | : | State Bank of India, New Delhi. |
| IFSC Code | : | SBIN0000691, Swift Code:SBININBB104 |

**Sri Dakshinamurti Seva Samiti**

SB A/C Number: 017401000014752 Indian Overseas Bank, Theni.

IFSC Code:IOBA0000174

**80G IT Exemption only for Vedanta Sasthra Prachara Trust**

**For Further Details Please Contact: 97517 51910 / 96004 49031**

Please Send the Transaction Details to swamiomkarananda@gmail.com (with Mobile Number & PAN)



ॐ

Sri Gurubhyo Namaha



# DHARMASRI SHASWATHA KSHEMA NIDHI

**(Corpus for Vedanta Sasthra Prachara Trust)**

Dear Devotees,

**Blessings! Om Namo Narayanaya!**

With the grace of Adiguru Sri Prajna Dakshinamurti and blessings of revered Gurus, the religious activities, Dharma and Vedanta Sasthra classes, entrusted with us, are being conducted in a proper manner. Since its inception in 1993, Vedanta Sasthra Prachara Trust, with its competent members, has been doing various spiritual activities in a well planned, systematic and consistent manner. With the grace of Adiguru, all these activities are carried out by donations from devotees, received from time to time, and from the bank interest to the present corpus of Rupees One Crore.

Keeping in mind the future increase in overheads like salary, electricity charges, travel and maintenance costs, etc and considering the prevailing Bank interest rates, the Trust would become self-sufficient with a corpus of Rupees Fifteen Crores (₹ 15,00,00,000).

In order to place the finances of the Trust on such a sound footing, it is proposed to implement a fund raising scheme - **Dharmasri Shaswatha Kshema Nidhi.** Under this scheme, devotees, individually or as a family, or as a group, can offer Rupees One Lac, or in multiples, to the Trust and help in its activities. The aim is to seek donation of Rupees One Lakh from 1500 devotees.

This amount will be deposited in the Bank. Only the interest received from this deposit, will be used to meet the day-to-day expenses of the Trust in maintaining its activities. The donors will be honoured as Patron Members. Puja will be performed in donor's and his family names (like their or their family member's birthday, wedding day, etc or any other important day) at Adiguru Sri Prajna Dakshinamurti Vidya Pitham, once an year, chosen by the Patron Member. On all important festivals and special Pujas, the Patron Member's name will be included in the sankalpam.

Annual meeting of Patron Members will be conducted by the Trust to brief them on its activities and interact with them for their valuable suggestions. Various activities for preserving and propogating our ancient culture and values are being implemented by the Trust for the welfare of the future generation. We request your kind co-operation for its growth and sustenance. You can also introduce this scheme to like minded friends and request them to participate. Donations can be sent to the Ashram address, by cheque or DD in the name of Vedanta Sasthra Prachara Trust, payable at Theni. This donation has 80G Income Tax exemption.




**Grace, the child of love is nourished by the wet nurse of wealth cherished.** (Thirukural by Thiruvalluvar : 757)




In the service of Adiguru

Swami Omkarananda

**(Swami Omkarananda)**
**(Founder of Sri Swami chidbhavananda Ashramam)**

**Trustees, Vedanta Sasthra Prachara Trust,** Vedapuri, Theni.

## Patron Members

| | |
|---|---|
| **728. Sri Sethu Meenakshi Sundaram,** | **Chennai.** |
| **729. Smt. T.K. Mala Lakshmi.** | **NewDelhi.** |
| **730. Smt. H. Chitra,** | **Coimbatore.** |

Published by **S. Ilangovan (Swami Jnanasivananda),** No. 22, Sriman Srinivasa Road, Alwarpet, Chennai-600 018 for and on behalf of Vedanta Sasthra Prachara Trust, Sri Swami chidhbhavananda Ashramam, Vedapuri, Chatrapatti Road, Theni-625 531 and printed by B. Rajkumar at Rasi Graphics Pvt. Ltd., No. 40 Peters Road, Royapettah, Chennai-600014.

**RNI No: TNMUL/2003/10326**